இந்த ஸ்ரீஸூக்தியில், அசித்ஸம்பந்தம் ஆத்மாவுக்கு ஸ்வரூபமன்றிக்கே வந்தேறியாயிருக்க, அதனை அநாதியென்று வழங்குவதன் கருத்து நன்கு விசதமாக்கப் பட்டிருக்கையாலே சங்கைக்கு இடமில்லை. .... .... (48)

## 49. மணவாளமாமுனிகளின் வியாக்கியான காம்பீர்யம்

மணவாளமாமுனிகளின் ரஹஸ்யவ்யாக்கியானங்களில் பலவிடங்களில், அதவா என்று தொடங்கியும், அன்றிக்கேயென்று தொடங்கியும் யோஜநாந்தரம் காட்டப்படுகிறது. அங்கு தாத்பர்யத்தில் எள்ளளவும் பேதமில்லை போல் காணப்படும். அதனால் இந்த பக்ஷாந்தரம் எதற்காக ப்ரஸ்தாவிக்கப்படுகிற தென்று தெரிந்துகொள்ள முடியாமலிருக்கும். இதற்கு ஓரிடம் எடுத்துக் காட்டுவோம். ஆசார்யஹ்ருதயத்தில் (76) "பேச்சுப் பார்க்கில் கள்ளப் பொய்ந்நூல்களும் க்ராஹ்யங்கள்; பிறவிபார்க்கில் அஞ்சாமோத்தும் அறு மூன்றும் கழிப்பனும்" என்கிற சூர்ணையின் வியாக்கியானத்தில் இரண்டு வகையான யோஜனைகள் காட்டப்பட்டிருக்கின்றன. இரண்டிலும் "அநிஷ்ட ப்ரஸஞ்ஜநம் பண்ணுகிறார்" என்கிற அவதாரிகையுள்ளது. அதை மாத்திரம் பார்ப்பவர்கள் முந்தின யோஜனைக்கும் பிந்தின யோஜனைக்கும் வாசி தெரிய வில்லையே என்று திகைப்பர்கள். பங்க்திகளைப் பூர்த்தியாக ஸேவித்தாலுங் கூட இரண்டு யோஜனைகளுக்கு விஷயம் விளங்கவில்லையே என்று திகைப்பர்கள் சிலர். இங்ஙனே திகைக்கவேண்டுமிடங்கள் மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்களில் பலபலவுள்ளன. மாமுனிகளின் அஸாதாரணமான ஜ்ஞான வைசத்யமடியான இப்படிப்பட்ட ஸ்தலங்களில் ஸாதாரணப்ரஜ்ஞர்கள் திகைப்பது வியப்பன்று. எடுத்துக்கொண்ட இவ்விடத்தை விளக்குகிறோம்.

மூலஸ்ரீஸூக்திக்கு என்ன அர்த்தமாகிறதென்று பார்ப்போம். (மூலம்) "பேச்சுப்பார்க்கில் கள்ளப்பொய்ந்நூல்களும் க்ராஹ்யங்கள்." இத்யாதி. திருவாய்மொழியின் ஏற்றமும் ஆழ்வாருடைய வைபவமும் நிரூபிக்கப்பட்டுவரும் ஸ்தலமிது. ஸம்ஸ்க்ருதபாஷையிலுள்ள க்ரந்தந்தானுயர்ந்தது, தமிழ்ப்பாஷையிலுள்ளது இழிவானதே என்று கொள்கையுடையார்க்கு ஆபத்தி கூறுகிறார் [மூலகாரர்] முதல் வாக்யத்தினால். "கள்ளப்பொய்ந்நூல்களும் க்ராஹ்யங்கள்" என்றது ஜைந பௌத்தாதிகளின் க்ரந்தங்களும் உபாதேயமாக வேண்டிவரும் என்றபடி. இரண்டு யோஜனைகளிலும் இப்பொருளில் வாசியில்லை. 'பேச்சுப் பார்க்கில்' என்கிற வார்த்தையானது இரண்டு விதமான பொருளை ஸஹிக்கிறது; ஸம்ஸ்க்ருத பாஷைதான் உயர்ந்தது என்று சொல்லப் பார்த்தால்-என்கிற பொருளும், த்ராவிடபாஷை மட்டமானது என்று சொல்லப்பார்த்தால் என்கிற பொருளும் கொள்ளகூடிய நிலைமையில் மூலம் அமைந்திருக்கிறது. மூலகாரருக்கு எந்தப் பொருள் விவக்ஷிதமென்றால் இரண்டும் விவக்ஷிதமாகக் குறையில்லை. பேச்சு என்கிற சொல் பொதுச் சொல்லாகையாலே ஸம்ஸ்க்ருதப் பேச்சு என்றும் அர்த்தமாகும். தமிழ்ப்பேச்சு என்றும் அர்த்தமாகும்; மேலே 'பிறவி பார்க்கில்' என்றவிடத்திலும் பிறவியென்னுஞ்சொல் பொதுச்சொல்லாகையாலே உத்தமஜாதியிற் பிறவியையுங் காட்டும், கீழ்ச்சாதிகளிற் பிறவியையுங் காட்டும். பாஷையிலும் ஜாதியிலும் கண்வைக்காமல், விஷயத்தை மாத்திரமே பார்ப்பவர்களுக்கு வக்தவ்யமானது ஒன்றுமில்லை. விஷயத்தைப் பாராமல் பாஷையையும் ஜாதியையுமே பார்ப்பவர்களுக்கு அநிஷ்டப்ரஸஞ்ஜநம் செய்யப்படுகிறதிங்கு. பாஷையைப் பார்ப்பவர்கள் இருவகைப் படுவர்: த்ராவிட பாஷையிலுள்ளது அநுபாதேயம் என்பவர் ஒருவகை; ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ளது உபாதேயம் என்பவர் மற்றொரு வகை. இவ்விரு வகுப்பினர்க்கும்

உத்தேச்யம் ஒன்றேயாகிலும் ப்ரகாரபேதமுள்ளதுதான். இதற்குச் சேர இரண்டு யோஜநைகள் காட்டப்பட்டன. பேச்சுப் பார்க்கில்-(1) பேச்சுப்பார்த்து இகழ்வதானால். (2) பேச்சுப் பார்த்து கௌரவிப்பதானால். பிறவிபார்க்கில்-(1) பிறவியைப்பார்த்து இகழ்வதானால்; (2) பிறவியைப் பார்த்து கௌரவிப்பதானால். இப்படியாக ஆழ்ந்து வியாக்கியானம் செய்தருளும் திறமை மணவாள மாமுனிகளிடத்தன்றி மற்றையோரிடத்துக் காண வரிது. .... (49)

## 50. புரிவதுவும்புகைபூவே—பட்டர் நல்வார்த்தை

நம்முடைய பூருவாசாரியர்கள் ஸகல சாஸ்த்ரப் புலவர்களான பரம ரஸிகர்கள். "கலையிலங்கு மொழியாளர்" என்றபடி அவர்களது வார்த்தைகளெல்லாம் அரிய, பெரிய சாஸ்த்ரார்த்தங்கள் பொதிந்து விளங்குவன. அவர்களுடைய நல்வார்த்தைகள் அருளிச்செயல் வியாக்கியானங்களில் மலிந்துள்ளன. அவற்றுள் பட்டருடைய வார்த்தையொன்று. ஒரு நாள் உபந்யாஸத்தில் *பரிவதி லீசனைப் பாடி* என்கிற திருவாய்மொழிப்பாசுரத்தில் "புரிவதுவும் புகைபூவே" என்றவிடத்தை யெடுத்துக்கொண்டு "இவ்விடத்தில் அகில்புகையென்றுவது கருமுகைப்பூ என்றுவது சிறப்பித்துச்சொல்லாமையாலே ஏதேனும் ஒரு புகையும்பூவும் எம்பெருமானுக்கு அமையும்; செதுகையிட்டுப்புகைக்கலாம்; கண்டகாலிப் பூவும் சூட்டலாம்" என்று ரஸமாக உபந்யஸித்தார் பட்டர். அதை நஞ்சீயர் கேட்டு, "ந கண்டகாரிகாபுஷ்பம் தேவாய விநிவேதயேத்" [கண்டகாலிப்பூவை எம்பெருமானுக்குச் சாத்தலாகாது] என்று சாஸ்த்ரம் மறுத்திருக்க, இப்படி அருளிச் செய்யலாமோ? என்று கேட்க, அதற்கு பட்டர் அருளிச்செய்த ரஸோக்தி'—"சாஸ்த்ரம் மறுத்தது மெய்தான்; கண்டகாலிப்பூ எம்பெருமானுக்கு ஆகாதென்று மறுத்ததன்று. அடியார்கள் அப்பூவைப்பறித்தால் கையில் முள் பாயுமே! என்று பக்தர்கள் பக்கல் தயையினால் சாஸ்த்ரம் நிஷேதித்ததேயன்றி எம்பெருமானுக்கு ஆகாத பூ எதுவுமில்லை" என்றும். (50)

## 51. எம்பாருக்கு ஆண்டானருளிச்செய்த நல்வார்த்தை

திருவாய்மொழியில் (2—9—2) *ஞானக்கை தா* என்றவிடத்து ஈட்டில் "எம்பார்க்கு ஆண்டானருளிச்செய்த வார்த்தையைஸ்மரிப்பது" என்றுள்ளது. இதன் விவரணம் வருமாறு:—முதலியாண்டான் ஒருகால் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருக்கையில் அவருடைய சிஷ்யரான வொரு ஸ்ரீவைஷ்ணவர் கோயிலிலே வந்து எம்பார் ஸந்நிதியிலே கைங்கரியம் பண்ணிக்கொண்டிருந்தார். அப்போது ஒருநாள் சில ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு எம்பார் திருவிலச்சினை ஸாதிக்கவிருக்கையில் இந்த ஸ்ரீவைஷ்ணவர் தமக்கும் திருவிலச்சினை (சக்ராங்கனம்) ஸாதிக்கும்படி வேண்டினார். அப்போது எம்பார் 'உமக்கு விசேஷ ஸம்பந்தமுண்டோ?' என்று அவரைக்கேட்க, 'தேவரீருடைய ஸம்பந்தமே ஸம்பந்தம்' என்று அவர் விண்ணப்பம் செய்தாராம். அவ்வளவிலே எம்பார் இவர் முதலியாண்டானுடைய ஸ்ரீபாதத்தவர் என்றறியாதே இவர்க்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைப்பண்ணி இவரைக்கொண்டு கைங்கரியங்களுங் கொண்டெழுந்தருளியிராநிற்கையில் முதலியாண்டானும் திருப்பிக்கோயிலிலே எழுந்தருள, அப்போது அந்த ஸ்ரீவைஷ்ணவர் ஆசார்ய ப்ரேமத்தாலே ஆண்டானிடம் சென்றுசேர, ஆண்டானும் முன்புபோலே இவரைக்கொண்டு வேண்டுங்காரியங்களைக் கொண்டருளியிருந்தார். அப்போது எம்பார் விசாரித்து அந்த ஸ்ரீவைஷ்ணவர் ஏற்கெனவே ஆண்டானுடைய சிஷ்யர் என்பதையறிந்து, ஆண்டானிடம் எழுந்தருளி 'எனக்க அபசாரப்பட்டேன். க்ஷமித்தருளவேணும்' என்றாராம்.

அப்போது ஆண்டான் எம்பாருடைய திருவுள்ளத்தில் க்லேசத்தையறிந்து எம்பாரை நோக்கி அருளிச்செய்த வார்த்தை :—"ஒரு கிணற்றிலே விழுந்த வனுக்கு இரண்டுபேர் கைகொடுத்தால் எடுக்குமவர்களுக்கு மெளிதாய் ஏறு மவனுக்கு மெளிதாயிருக்குமிறே. அப்படியேயாகிறது"—என்றும். .... (51)

## 52. "கிமிதம்புஸ்தகம் ?—இதமபி மயா படிதம் !"

ஒரு வித்வான் தம்முடைய பரமஸௌந்தரியான மகளுக்கு வரன் தேடிக் கொண்டிருந்தார். அவரும் அவருடைய குமாரர்களும் இப்பெண்ணும் ஆக எல்லாரும் நன்கு ஸம்ஸ்க்ருதம் படித்தவர்களாதலால் நன்ருகப் படித்த வரன் வேணுமென்று தேடிக்கொண்டிருந்தார். ஒருவர் தம்முடைய குமாரனுக்கு நல்ல படிப்பு இருப்பதாகப் பொய்சொல்லி வஞ்சித்து விவாஹத்தை முடித்துக் கொண்டார். அந்த மணவாளப்பிள்ளை பாடசாலைக்குப் போய் வந்து கொண்டிருந்ததனுல் மெய்யே படிப்பாளியென்று மாமனுர் முதலானவர்களும் ப்ரமித்திருந்தார்கள். விவாஹமோ முடிந்துவிட்டது.

இப்படியிருக்கையில், ஸரஸ்வதீ பூஜையன்று முதல்நாள் ஜாமாதாவை மாமனுர் தம் இல்லம் வரும்படி அழைத்தார். ஜாமாதாவும் தன் தகப்பனுரிடம் உத்தரவு பெற்றுக்கொள்ளச் சென்ருன். அப்போது தகப்பனுர் 'பயலே! உனக்கோ படிப்பு ஒன்றும் பலிக்கவில்லை ; உன்னை மஹாபண்டிதனுக நான் பொய் சொல்லி ஏதோ விவாஹத்தை முடித்துவைத்தேன் ; உன் சாயம் வெளிப்படுவதற்கு இன்று ஸந்தர்ப்பம் வந்துவிட்டதே ! வேறு பண்டிகை நாள்களாக இருந்தால் பாதகமில்லை ; இப்போது ஸரஸ்வதீ பூஜைக்காக உன்னையழைக்கிருர்கள். அவர்களெல்லாரும் பெரிய பண்டிதர்களாகையால் அவர்களில்லத்தில் பலபலபுஸ்தகங்களுண்டு; அவற்றையெல்லாம் உன்மாமனுரும் மைத்துனன்மார்களும் எடுத்துப் பரிஷ்காரப்படுத்துவர்கள் ; அந்த ஸமயத்தில் நீ அவர்களெதிரில் ஊமைபோல் உட்கார்ந்திருக்க வேண்டியதாகும் ; உன்னுடைய சாயம் வெளிப்படுவதோடு நில்லாமல் என்னுடைய பொய்ம்மையும் வெளியாகிவிடுமே யென்று அஞ்சுகிறேன்' என்ருர். அதற்கு அவன் ஒன்றும் பதில் சொல்ல மாட்டாமல் தலைகுனிந்து நின்ருன்.

மறுபடியும் தகப்பனுர், பயலே! நான் ஒரு உபாயம் சொல்லித்தருகிறேன் ; நாளை காலை அவசியம் வருவதாக அவர்களுக்கு நீ பதில் சொல்லியனுப்பிவிடு ; இன்றிரவு முழுவதும் ஸம்ஸ்க்ருதத்தில் நாலிரண்டு வார்த்தை உனக்கு வரும்படி நெட்டுருப்போட்டு வைக்கிறேன். அதை நீ நாளைக்கு அங்கு உபயோகப்படுத்தினுல் ஒருவாறு மானத்தோடு திரும்பி வரலாம்' என்ருர். குமாரன் அப்படியே இசைந்தான். தகப்பனுர் அன்றிரவுமுழுவதும் மகனுக்குப் பாடம் பண்ணிவைத்தது என்னவென்ருல்; உன் மாமனுர் ஏதாவது ஒரு பெரிய புஸ்தகம் எடுத்தாராகுல் அப்போது நீ 'கிம் இதம் புஸ்தகம்' என்று கேள் ; அவர் இன்ன புஸ்தகமென்று பதில் சொல்லுவர் ; அப்போது நீ "இதம் மயா படிதம்" என்று சொல்லு. மறுபடியும் அவர் வேறொரு பெரிய புஸ்தகமெடுக்கும் போதும் 'கோயம் ஸ்ரீகோச:' என்று கேள் ; அவர் பதில் சொன்னவுடனே "ஏததபி மயா அதீதம்" என்று சொல்லு. என்றிப்படிச் சிலவார்த்தைகளை வெகு சிரமப்பட்டுக் கற்பித்து வைத்தார். அவற்றை அப்படியே உபஸ்திதி செய்துகொண்டு மறுநாள் காலை மாப்பிள்ளை மாமனுரகத்திற்குச் சென்று சேர்ந்தாயிற்று. முதனுளிரவெல்லாம் நெட்டுருப்போட்ட ஸம்ஸ்க்ருத வார்த்தைகளை உபயோகப் படுத்த ஸமயமும் வாய்த்து விட்டது.

ஸரஸ்வதீபூஜைக்கு ஆரம்பித்த மாமனார் ஒருபெரிய ஓலைச்சுவடியை அவிழ்த்தார். கிமிதம் புஸ்தகம் (இது என்ன புஸ்தகம்?) என்று ஜாமாதா கேட்டார். அதற்கு மாமனார் 'அயம் தசோபநிஷத் பாஷ்ய ஸ்ரீகோச:' என்றார். உடனே மாப்பிள்ளை "இதம் மயா படிதம்" (இது நான் வாசித்திருக்கிறேன்) என்றான். அதுகேட்டு எல்லோரும் ஸந்தோஷித்தார்கள். மாமனார் மறுபடியும் ஒருபெரிய புஸ்தகம் அவிழ்த்தார். "கோயம் ஸ்ரீகோச:" என்றான் ஜாமாதா. "சாபர பாஷ்ய மிதம்" என்றார் மாமனார். "ஏததபி மாயா அதீதம்" (இதுவும் நான் வாசித்திருக்கிறேன்) என்றான் ஜாமாதா. அது கேட்டும் எல்லாரும் மஹாநந்தமடைந்தார்கள். மறுபடியும் ஒரு ஸ்ரீகோசத்தை அவிழ்க்கும்போதும் இதமபி மயாபடித மென்றான். மாமனார் வேறொரு பெரியபுஸ்தகம் அவிழ்த்தார். அஃது என்னவென்றால், இனிமேல் எழுதுவதற்காக ஏடுகளைச் சேமித்து வைத்திருக்கிற எழுதாத புஸ்தகம். 'கோயம் ஸ்ரீகோச:' என்றார் ஜாமாதா. 'அலேகக்ரந்த:' (எழுதாத ஏடு) என்றார் மாமனார். 'இதமபி மயா படிதம்' (இதுவும் நான் வாசித்திருக்கிறேன்) என்றார் ஜாமாதா. அது கேட்டவுடனே அவர்களுக்கு துக்கம் தாங்க முடியாததாயிற்று. இந்த ஜாமாதாவின் மனைவியும் நன்றாகப் படித்தவளாகையாலே இப்படிப்பட்ட உலக்கைக்கொழுந்து புத்திசாலியான பர்த்தா நமக்கு வாய்த்தானே! என்று மிக்கசோகம் பொறுக்ககில்லாமல் 'முஸலகிஸலயமே!' என்று சொல்லி அவன் தலையில் ஒரு குட்டு குட்டிச் சென்றாளாம்; அவன் அந்த அவமானம் பொறுக்கமாட்டாமல் உடனே எழுந்து வெளியேறி காசிக்குச் சென்று வெகு ஆஸ்தையுடன் வாசித்து சதுச்சாஸ்த்ர பண்டிதனாகி மீண்டுவந்து முஸலகிஸலயம் என்கிற ஒரு க்ரந்தத்தை இயற்றினனும். இந்த க்ரந்தம் இப்போதும் கிடைக்கிறதென்கிறார்கள்.

சென்னை ஸ்ரீவைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபையில் அச்சிட்ட (தெலுங்கு லிபி) ஸம்ப்ரதாய அகராதியில் 'அழகிய மணவாளச் சீயர்' என்ற திருநாமத்தின் விவரணத்தில் இந்த முஸலகிஸலயக்ரந்த நாமநிர்தேசமும் வேறொரு கதையும் காண்கிறது. அது ஸம்ப்ரதாய கோஷ்டியில் ஏற்பட்ட கதையென்பர்.

## 53. நமக்கு எம்பெருமானோடு பழக்கம்வேண்டும்

ஒரு தலைநகரில் பெரிய வணிகரொருவரிருந்தார். அவர்க்குப் பெரிய வியாபாரிகள் பலர் நண்பர்களாயிருந்தனர். பல தனிகர்களின் பரிசயமும் அவர்க்கு விசேஷமாகவுண்டு. பல தொழிலாளர்களின் நேசமுமுண்டு. பெரிய அதிகாரிகள் பலரும் தெரியும். பெரிய ஸ்டீமர் வியாபாரிகளுடைய நட்புமுண்டு. தங்கம் வெள்ளி வியாபாரிகள் தரகர்கள் மற்றும் பல பெரிய மனிதர்களும் அவர்க்கு வசப்பட்டிருந்தார்கள். எல்லாரோடும் நன்றாய்ப் பழகிச் சாதுர்யமாய் அச்சமில்லாமல் அந்த வணிகர் பேசுவார். எல்லாவிதமான வியாபாரங்களிலும் பூர்ணமான ஸாமர்த்தியம் அவர்க்கு இருந்தது. ஆனால் அவர் தம் தகப்பனாரோடு மாத்திரம் பேசமாட்டார். பேசவும் தெரியாது அவர்க்கு. தகப்பனாரோடு பேச மிகவும் வெட்கப்படுவர். தகப்பனாரெதிரே போகவும் மிகக்கூசுவர். நண்பர்களே!, இங்கு ஆலோசிக்க வேண்டியதென்ன? எவன் தகப்பனாரெதிரே போகவும் அவரோடு பேசவும் உற்சாகங்கொள்ளாமல் ஒதுங்கியிருக்கிறானோ அவனிடம் அவனது தகப்பனாருக்கு எப்படி அன்பு இருக்கும்? தகப்பனார் ஸம்பாதித்த ஸொத்தை அநுபவிக்கிறான்; தகப்பனாருடைய தயவினால் யதேஷ்டமாக ஸுகம் அனுபவித்துக்கொண்டு மிருக்கிறான். ஆனால் தகப்பனாரோடு பேசுவது மாத்திரமில்லை யென்றால் இது நியாயமாகுமா?

அன்பர்களே!, அந்த வணிகரைப் போலவேதான் நாமும் உலக வியவஹாரங்களில் மிகவும் தேர்ச்சி பெற்றிருக்கிறோம். நமது காரியங்களுக்காகப் பலரோடும் பலவிதமாகப் பேசுகிறோம், பழகுகிறோம்; ஆனால் நமக்கெல்லாம் பிதாவும் பரமதயாளுவுமான பகவானோடு ஒரு நாளாவது ப்ரீதியோடு மனப்பூர்வமாக நாம் பேசுகிறோமா? பழகுகிறோமா என்றால் இல்லை. நாம் அந்த ஸர்வேச்வரனுடைய க்ருபையினால்தான் இவ்வுலகத்திற்கு வந்தோம்; அவருடைய தயவினால்தான் தரித்திருக்கிறோம். அவரருளிய உணவுகளைத் தான் புஜிக்கிறோம். அவருடைய கருணையால்தான் கூடியவரையில் நோயற்ற வாழ்வும் குறையற்ற செல்வமுமாய் இருந்து வருகின்றோம். அவருடைய ஸொத்துக்களைத்தான் நாம் உபயோகிக்கிறோம், அநுபவிக்கிறோம். ஆனால் இப்படிப்பட்ட பேருபகாரியாய்ப் பரமதயாளுவான எம்பெருமானோடு ஒரு நாளாவது பிரேமம் கசிந்து இளகிய மனதோடு பேசுகிறோமில்லை; பழகுகிறோமில்லை. அவரோடு பேசும் வழியையே அறியாதவர்களாயிருக்கின்றோம். இது தகுமா? .... (53)

## 54. பகவானோடு பேசுவதெப்படி?

எம்பெருமானோடு பேசுவதென்றால் என்ன? எப்படி? என்று நீங்கள் கேட்கக்கூடும். எம்பெருமான் நமது கண்ணுக்குப் புலப்படுகிறாரா? நம்மோடு அவர் பேசுவாரா? என்றும் நீங்கள் ஆலோசிக்கக்கூடும். கேளுங்கள்; ஒரு பெரிய மஹாராஜாவிடம் நாம் போய் நமது குறைகளைச் சொல்லிக் கொள்ளுகிறோம். ஒரு பெரிய தனவானிடம் ஒரு ஏழை போய்த் தனக்கு வேண்டியதைக் கேட்கிறான். மஹாராஜாவும் தனவானும் அவர்களுடன் பேசுகிறார்களென்று சொல்ல முடியுமா? ஒருகால் பேசினாலும் பேசுவர்கள். பேசாமலிருந்தாலுமிருப்பர்கள். இது தெரிந்திருந்தும் அவர்களிடம் நாம் போகிறோம் அவர்களிடம் நமக்கு உண்மையான அன்பு இருப்பதாகக் காட்டிக்கொள்ளுகிறோம்; நமக்கு வேண்டியதைக் கேட்கிறோம். இவ்விதமாகவே பரம்பொருளான ஸர்வேச்வரனிடம் நாம் நமது உண்மையான ப்ரீதியைக் காட்டி ஏன் பேசக்கூடாது? எம்பெருமானோடு பேசுவதென்றால் என்ன! பழகுவதென்றால் என்ன? ஏகாக்ரமான மனதுடன் எம்பெருமானை தியானஞ்செய்து நம்மெதிரிலிருப்பதாகவே பாவித்து ஆழ்ந்த பேரன்புடன் அவனது திருநாமங்களைச் சொல்லி அவனது திருக்குணங்களை நெஞ்சால் நினைத்தும் வாயாற் சொல்லிப் புகழ்ந்தும் வருவதேயாம் எங்கும் நிறைந்து நமது ஹிருதயங்களிலும் வாஸஞ்செய்கின்ற பரமதயாளுவாய் ஆநந்த ஸ்வரூபியான பரமாத்மாவைத் தானும் ப்ரேமமயனாய்த் தியானித்து ப்ரார்த்தனை செய்து வருவதே அவனோடு பழகுவதாகும். இதுவே எம்பெருமானோடு பேசும்வகை. இப்படிப்பட்ட நிலைமை நமக்கு ஏற்படவே எம்பெருமான் திருவுள்ளமுகந்து நம்மோடு கலந்து பழகுவான்; கருணைக்கடலான ஸர்வேச்வரன் நம்மேல் கருணைகூர்ந்து நமது குறைகளை நீக்குவான். நமக்கு ச்ரேயஸ்ஸைக் கொடுப்பான். ஆகவே துயரக்கடலுள் ஆழ்ந்து பரிதவிக்கும் நாம் இனியாவது பரமபிதாவான எம்பெருமானைக்கிட்டி நாடோறும் அவனோடு பழகவும் பேசவும் உற்சாகங் கொள்வோமாக. .... .... (54)

## 55. சாஸ்த்ரஜ்ஞானமும் உபதேசவுணர்ச்சியும்.

"சாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேசம் புத்தேச் சலநகாரணம், உபதேசாத்ஹரிம் புத்த்வா விரமேத் ஸர்வகர்மஸு" என்பது நம் ஆசாரியர்கள் எடுத்துக்காட்டும் பிரமாண வசனங்களுள் ஒன்று. இதன் பொருளாவது சாஸ்த்ரங்களை வாசித்து ஞானம் பெறுவதென்பது மிகவும் கடினமானது; சிரமப்பட்டுப்பெற்ற

லும் புத்தி சலிப்பதற்கே ஹேதுவாகும்; தெளிவு உண்டாகாது. ஆகவே மஹா சார்யர்களின் திருவடிவாரத்தில் காத்திருந்து அவர்களிடம் உபதேசங்கள் கேட்டு அவ்வழியாலே பகவானை யறிந்துகொண்டு ஸகலகர்மங்களிலும் ஓய்ந் திருக்கவேண்டும்—என்பதாம். இதனால் சாஸ்த்ரங்களை வாசிக்கக் கூடாதென்று கட்டளையிடுவதாக நினைக்கலாகாது. எத்தனை சாஸ்த்ரங்கள் வாசித்தாலும் ஆசார்யர்கள் ஸாரமான பொருளைத் திரட்டி யெடுத்து உபதேசிக்கக் கேட்டா லொழியத் தெளிவு பிறவாது, ஆகவே உபதேசம் கேட்பதுதான் முக்கியம் என்னுமிவ்வளவே இந்த வசனத்தின் கருத்தாகத் தேறும். நமது ஸம்பிரதாயத் தில் ஆசாரியர்கள் பரம்பரையாக வந்துகொண்டிருக்கிறார்கள்; இவர்கள் சிஷ் யர்களுக்கு உபதேசங்கள் செய்யவேணுமானால் சாஸ்த்ரஜ்ஞான ஸம்பந்நர்களா யிருந்தாலொழியச் செய்யமுடியாது. உபதேசம் கேட்கிற சிஷ்யர்கள் பிறகு ஆசார்ய பதவியில் அமர்ந்து தாங்கள் தம் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்ய வேணுமானால் தாம் சாஸ்த்ரஜ்ஞான ஸம்பந்நர்களா யிருந்தாலொழியச் செய்ய முடியாது. இப்படி சிஷ்யாசார்ய க்ரமம் தொடர்ந்து வருமிடத்து சாஸ்த்ரஜ் ஞான ஸம்பத்து இன்றியமையாததாகும். ஆகவே *சாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக் லேசம்* என்கிற இந்த வசனமானது சாஸ்த்ரஜ்ஞானம் ஸம்பாதிக்கவேண்டா மென்று சொல்லவந்ததன்றென்றும் உபதேசம் பெறவேண்டியது ஆவச்யகம் என்பதை வற்புறுத்தவே வந்ததென்றும் கொள்ளக்கடவது. .... (55)

### 56. பெண்ணை யென்கிற தமிழ்ச் சொல் வடமொழியில் பண்ணு என்றாகுமா?

விவேகிவித்வான்கள் விமர்சிக்க இது விளம்புகிறோம். திருக்கோவலூரில் பிநாகிநீ நதி பெருகுகின்றது. பிநாகிநீ என்ற வடசொல்லைத் தமிழர்கள் பெண்ணையென வழங்கு கிறார்கள். திருமங்கையாழ்வாரும் திருக்கோவலூர்ப்பதிகத்தில் "பெண்ணைத் தென்பால் ..................திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே" என்றருளிச் செய்கிறார். இந்த நதியை ஸம்ஸ்க்ருதத்தில் பேசவேணுமானால் பிநாகிநீ யென்றிட்டுப் பேசவேணுமே யொழிய வேறு விதமாகப் பேச ஔசித்யமில்லை. அந்தத் திருக்கோவலூரெம்பெரு மானைப் பற்றி தேசிகனருளிச் செய்த தேஹளீசஸ்துதியில், 7, 15-ஆம் சுலோகங்களில் பண்ணு என்று ஸம்ஸ்க்ருதபதமாக ப்ரயோகம் செய்யப்பட்டிருக்கிறது. இது எங்ஙனே பொருந்துமென்று விமர்சிக்க ப்ராப்தமாகிறது. முன்னடி ஒரு விஷயத்தைத் திடமாக நெஞ்சிற் கொள்ள வேணும். அதாவது ஸம்ஸ்க்ருதத்தில் ஆகாராந்தமாக இருக்கிற பதம் தமிழில் "ஆவீறு ஐயும்" என்கிற நன்னூற் சூத்திரத்தின்படி ஐகாராந்தமாகுமே யொழிய, தமிழில் ஐகாராந்தமான சொல் ஸம்ஸ்க்ருதத்தில் ஆகாராந்தமாகிறதென்பது அஸம்பாவிதம். ரமா, ஸரமா, பாமா இத்யாதிகளான ஆகாராந்த ஸம்ஸ்க்ருத பதங் களைத் தமிழில் ரமை, ஸரமை, பாமை என்று ஐகாராந்தமாகப் பிரயோகிக்கலாமே தவிர, நங்கை, மங்கை, தங்கை என்று ஐகாராந்தமான தமிழ்ச் சொற்களை **நங்கா, மங்கா, தங்கா** என்று ஸம்ஸ்க்ருதமாக்கி ப்ரயோகிப்பதென்பது இவ்வுலகில் நடையாடுவதன்று. புரோஹிதர்கள் விவாஹாதி காலங்களில் அநுக்ரஹம் சொல்லும்போது "அலமேலு மங்கா ஸமேத: ஸ்ரீ ஸ்ரீநிவாஸ:" என்று சொல்லுவர்கள்; அப்போது ஸதஸ்ஸில் வீற் றிருக்கும் வித்வான்கள் முகம் சுளிப்பர்களென்பது வித்வத்கோஷ்டியில் ப்ரஸித்தம். இப்படிப்பட்ட அஸம்பத்த ஸம்ஸ்க்ருதங்கள் கசடறக் கற்ற கலாவல்லபர்களிடத்தில் தலைகாட்டமாட்டா. பெண்ணை என்கிற பெயரை அப்படியே ஸம்ஸ்க்ருதத்தில் பிர யோகிக்க நினைத்தால் "பெண்ணை ஸமாக்ய" என்றோ, "பெண்ணை நாமக" என்றோ இவ் விதமாக ப்ரயோகிக்கலாமேயல்லது பண்ணு என்று பிரயோகிக்க சாஸ்த்ரஸரணியில் சிறிதும் ஔசித்யம் கிடையாது. அப்படியிருக்க, தேசிகன் (பண்ணு) என்று எங்ஙனம் ப்ரயோகித்தருளினாரென்று ஆராய ப்ராப்தமாகிறது. குடந்தையை 'குடந்தா' என்றும், அழுந்தையை அழுந்தா என்றும், வேளுக்கையை **வேளுக்கா** என்றும், அயிந்தையை

அயிந்தா என்றுமிப்படி சிலர் வ்யவஹரித்தால் இதை ஸாதுவென்று கொள்வாருண்டோ? அப்படியே இதுவும் அஸாதுவென்ன வேண்டி வருகிறது.

திருக்கோவலூரில் ஜ்ஞாந சீல வயோவ்ருத்தராயெழுந்தருளியிருந்த ஒரு ஸ்வாமி ஸாதிக்கக் கேட்டதாவது, தேஹளீசஸ்துதியில் பண்ணு என்கிற பாடம் அச்சுக்கூடமுண்டானபின்பு கண்ணில் பட்டதேயொழிய, பெரியோர்களெல்லாரும் (புண்யா) என்றுதான் அநுஸந்தித்து வந்தார்கள் என்று. இதைக்கேட்ட க்ஷணத்தில் நமக்குண்டான ஆனந்தத்திற்கு அளவேயில்லை. பிநாகிநீ என்ற வடசொல்லை ஆழ்வார் தமிழ்நெறிக்குச்சேர பெண்ணையாக்கினர்; அச்சொல்லை ஆசார்யர் ஸம்ஸ்க்ருத ஸரணிக்குச்சேர **புண்யா** என்றாக்கினர் என்பது தத்துவம். வையாகரண கோஷ்டியில் "ஏகதேச விக்ருதம் அநந்யவத் பவதி" என்றொரு ந்யாயம் வழங்குவதுண்டு. அதன்படி **பெண்ணை** என்பதற்கும் **புண்யா** என்பதற்கும் ஒரு சேர்த்தியுண்டிறே. கொச்சி என்கிற நகரத்தை வடமொழியாளர் "கோஸ்ரீ" எனவும் பூனாபுரியை **புண்யபுரி** எனவும் வழங்கிவருகிறார்கள் சென்னையில் 'அர்பத்நட்' என்றொரு தனரக்ஷகநிதியிருந்தது; அதனை வடமொழியாளர் (அர்புதநாத:) என வழங்கிவந்தார்கள். இது வடமொழி ரீதியில் பொருத்தமான வொருபொருளைத் தருவதோடு மூலமான ஆங்கிலச் சொல்லுக்கு ப்ரத்யபிஜ்ஞாபகமுமாகிறது. 'கவர்னர்' என்கிற ஆங்கிலப்பெயரை ஒரு வித்வான் (கௌரநர:) என்று ஸம்ஸ்க்ருதமாக்கினர்; இந்த ஸம்ஸ்க்ருத பதத்திற்கும் அந்த ஆங்கிலமொழிக்கும் தொடர்பு இல்லையாகிலும், ஸம்ஸ்க்ருதரீதிக்குச் சேர ஒரு அர்த்தம் தருவதும் கவர்னரை ப்ரத்யபிஜ்ஞாபனம் பண்ணுவதுமாயிருப்பதனால் இப்படிப்பட்ட அநுவாதங்களில் ஒரு சோத்யமும் ப்ராப்தமாகிறதில்லை. இவ்வண்ணமாக, பெண்ணையை புண்யா என்பது மிகப்பொருத்தம். பண்ணு என்பதற்குப் பொருத்தமே கிடையாது.

இவ்விஷயத்தைக் கண்டவுடனே நிதிபெற்றோமென்று உகக்க பாக்யமற்றவர்கள் *வம்பவிழ்கோதை பொருட்டாப் பாசுரத்தின் ஸம்ஸ்கிருதத்தில் நடந்த விபுலவிசாரத்தில் அந்வயித்து பங்கப்பட்டவர்களுக்குத் தோள்தீண்டிகளாக வேண்டுமத்தனை. (56)



## — இடையில் அறிவிப்பு —

நமது எழுபது நல்வார்த்தைகளில் இதுகாறும் ஐம்பத்தாறு நல்வார்த்தைகள் முடிவுபெற்றன. மிக்குள்ள பதினான்கு நல்வார்த்தைகளைப் பதினான்கு விஷயங்களாக இட்டு ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தப்ரதிபாதனத்தில் தலைக்கட்டுகிறோம். காண்மின். பசுக்களிற்காட்டில் நமக்கு வாசி ஞானத்தினால். பசுக்களுக்கு ஞாமினல்லாமற் போகவில்லை; ஆனால் பகுத்துணர்வில்லை. நமக்குச் சிறப்பான பகுத்துணர்வை நாம் நன்கு பயன்படுத்திக் கொள்ளாவிடில் நாம் நரபசுக்களே யாவோம். விஷயதத்துவம் நெஞ்சில் நன்றாகப்படடும் மூர்க்கத்தனமான பிடிவாதமே கொள்வது பேதைமையாகும். மேலுள்ள பதினான்கு பாராக்களை நடுநிலையான நெஞ்சுடன் வாசிப்பது நன்று.

# தென்கலை வடகலைத் தெளிவு

57. அடியேனுடைய வாழ்நாளில் இரு கலைகளின் விவாத ஸம்பந்தமாக நூற்றுக்கணக்கான நூல்கள் எழுதி வெளியிடப்பட்டுள்ளனவென்பதை உலகமறியும். ஏதோ க்ஷாத்ரபுத்திகொண்டு மாச்சரியத்தினால் அவற்றை நாமெழுதியிருப்பதாகச் சிலர் நினைத்தாலும், யதார்த்தத்திற்கு மாறாக ஓரெழுத்தும் நம்மாலெழுதப்பட்டிருக்கவில்லை யென்பது ஸகல ப்ராமாணிகர்களுடையவும் உள்ளமறிந்தது. தென்கலை ஸம்பிரதாயஸ்தர்களைவிட வடகலை ஸம்பிரதாயஸ்தர்களோடுதான் அடியேனுக்கு அதிக நட்பு என்பதையும், அவர்களிடத்தில் லாகவ புத்திலேசமுமின்றிக்கே கௌரவ புத்தியுமுடையோ மென்பதையும் தத்வவித்துக்கள் உள்ளபடியுணர்ந்திருக்கிறார்கள். அந்த ஸம்பிரதாயத்தில் ஜ்ஞாதாக்களில்லையென்றாவது அநுஷ்டாதாக்களில்லையென்றாவது நாம் நினைத்ததுமில்லை, எழுதினதுமில்லை. சிலபலவாண்டுகட்கு முன்பு அந்த வகுப்பினரில் சிலர் ஏதோ காரணார்த்தமாக வீணான வம்புகளில் தலையிட்டுச் சில விபர்யயங்களையுண்டாக்க, அதனை விவேகிகளும் இடையறாது அநுவர்த்திக்கச் செய்து கொண்டு வருகிறார்களென்கிற இஃது ஒன்றுதான் நம்முடைய விவாத நூல்களுக்கு ஜீவநாடியானது. ஆனால் உலகத்தில் பலவிடங்களில் வேரூன்றி ஊர்ஜிதமானவது இனி ஒருவகையாலும் மாறுபாடடைய முடியாததாகவேயிருக்கின்றதென்பதையும் நாம் நன்கு தெரிந்துகொண்டேயிருக்கிறோம்.

58. உப்பிலியப்பன் ஸன்னிதியில் வாழும் ஸ்ரீஉ.வே. நவநீதம் ஸ்ரீராமதேசிகாசாரியர் இளமை தொடங்கி என்னுடைய அந்தரங்க ப்ரீதிக்கு ஆஸ்பதமானவர். எனக்கு ஸஹோதர ஸ்தானத்திலும் புத்ர ஸ்தானத்திலும் நிற்பவர். என் மனதாலும் அவர் மனதாலும் (அவரைப்பற்றி இங்கு) ஏகவசந நிர்தேசம் அநுரூபமாயிருக்கச் செய்தேயும் "ராமஸுக்ரீவயோரைக்யம் தேவ்யேவம் ஸமஜாயத" என்னுமாபோலே எமக்குள் வாய்த்த ஐக்யத்தை அறியகில்லாதார் அவரை நாம் லாகவப்படுத்தி இழிவாக எழுதுவதாய் நினைக்கக்கூடுமென்னுமத்தாலும், உண்மையில் அவரிடத்து யோக்யதாதிசயம் மிக்கிருக்கையாலே அதற்குச் சேர்ந்திருக்கவேண்டுமென்னுமத்தாலும், "கணபுரம் கைதொழும் பிள்ளையைப் பிள்ளையென்றெண்ணப் பெறுவரே" "வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருகவென்று மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே" என்னும் பாசுரங்களுக்கும் சேர்ந்திருக்கவேணுமென்னுமத்தாலும் அந்த விலக்ஷணவ்யக்தியைப்பற்றி பஹுவசநநிர்தேசமே செய்யலாகிறது. அவர் என்னுடைய ஸகல நூல்களையும் ஆதரத்தோடு அநுபவிப்பவர். விசேஷித்து விவாத நூல்களையும் ஆரஅமர ஆழ்ந்து அவலோகனம் செய்பவர். யதார்த்தம் உலகுக்குத் தெரியவேணுமென்கிற புனிதமான ஓர் எண்ணத்தைமட்டுங்கொண்டு நாம் எழுதிவரும் நூல்களில் உண்மைக்கு மாறான விஷயங்களிருந்தால் அவற்றை அவர் திருத்திக்கொடுக்கவேணுமென்று நாம் நமது பத்ரிகைகளில் உலகங்காண வெளியிட்டுமிருக்கிறோம். அவர்க்குத் தனிப்படக் கடிதங்களுமெழுதியிருக்கிறோம். "நாம் ஒன்றும் தெரிவியாமல் வாளவிருந்துவிடுவது நலமன்று" என்று அவர்க்கே தோன்றினபடியால் சென்ற கார்த்திகை மாதத்தில் ஒன்று தெரிவித்தார்;

"ஸர்வசரண்யனான எம்பெருமான் தானே நேரில்வந்து அருளிச்செய்தாலுங்கூட இவற்றை நாங்கள் விடப்போகிறதில்லை"—என்று.

"பாத்ரம் வாழிதிருநாமம் பிரபந்தசாரம் பிள்ளையந்தாதி முதலானவை கோவில் சண்டைக்காக இடையில் கல்பிதங்களென்று தேவரீர் பன்முறையும் எழுதிவருவதை ஸர்வேச்வரன் தானே நேரில் ஸேவை ஸாதித்து உண்மைதானென்று

சோதிவாய் திறந்து பணித்தாலுங்கூட இவற்றை நாங்கள் விடமாட்டோம்" என்பது அவருடைய லிகிதத்தின் பொருள்.

59. அவருடைய இந்த வார்த்தை மிகவும் யுக்தமானதே. இரண்டு நூற்றாண்டாக ஆங்காங்கு வேரூன்றியும், நியாயஸ்தானங்களில் எல்லையளவும் எட்டிப்பார்த்தும் மேன்மேலும் மும்மிரமாக வளர்ந்தும் வருகின்ற விஷயங்களில் திடீரென்று ஒரு விச்ராந்தி விளைந்திடுமென்று நாம் எதிர்பார்க்கிறோமா? எதிர் பார்க்கத்தான் முடியுமா? இத்தகைய ப்ரதீக்ஷை பாகரனுக்குமுண்டாகாது. தென்னாட்டோடு நில்லாமல் வடநாட்டிலுங்கூட முளைத்து வளர்கின்ற இந்த விவாதம் மேன்மேலும் முற்றுமேயொழிய ஓயுமென்று நினைப்பதற்கில்லை. ஆனாலும் "உண்மைப் பொருள்கள் உலகில் ஒரு மூலையிலாவது விளங்கிக்கொண்டிருக்க வேணும்" என்கிற ஒரு கருத்தைக்கொண்டே நாம் எழுதிவருகிறோம். இதை தடஸ்தர்களான பல மஹான்கள் அறிந்தேயிருக்கின்றார்கள். எழுபதாவது வயது கழியுந்தருணத்திலிருக்கின்ற நாம் வயோநுரூபமாக அசக்தி அதிகரிக் கப்பெற்றாலும், வடநாட்டிலுள்ள பண்டிதர்களுக்கும் பக்தர்களுக்கும் மஹோப காரமாக இன்னும் பல நூல்களியற்ற ஸங்கல்பித்துக்கொண்டு காரியங்கள் செய்துவருகின்றோமாதலால், பிறருடைய அதர்க்கஙைச் செய்கைகளைக் கண்டித் தெழுதும் பணி நமக்கு இனிமேலும் அநுவர்த்தியாதொழியவேணுமென்னு மாசைகொண்டு ப்ரக்ருத விஷயத்தை ஸாரஸம்க்ஷேபமாக முடித்திடுகின்றோம்.

60. வடகலைப் புண்ட்ரம் புதிதாக ஏற்பட்டதென்கிற எண்ணம் நமது நெஞ்சில் ஒரு மூலையிலும் கிடையாது. உலகில் பலவகைப்பட்ட புண்ட்ராகாரங் களைக் கண்டுவருகின்றோம். எதுவும் நூதனமாக ஏற்பட்டதன்று. ஸூர்ய சந்திரர்கள் ஏற்பட்ட நாள்முதலாக இவையும் ஏற்பட்டவையே. "ஸூர்யா சந்த்ரமஸௌ தாதா—அகல்பயத்" என்றோதவந்த உபநிஷத்து இடையில் யதாபூர்வம் என்றொரு பதத்தைச் சேர்த்துள்ளது. இதனால் ப்ரஹ்ம ஸ்ருஷ்டி யானது ஆதிகாணமுடியாததென்பது நன்கு விளங்கும். "வணங்குந் துறைகள் பலபலவாக்கி மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பலபலவாக்கி, அவையவை தோறு அணங்கும் பலபலவாக்கி" என்கிற நம்மாழ்வாரருளிச் செயலையும் கூட்டிக்கொண்டு பார்ப்போமாயின், புதிதாகத் தோன்றினதென்று எதையும் நாம் புகலலாகாது. ஏகாதசீ ச்ராத்தம் அஸக்ருந் நமஸ்காரம் விதவாவபனம் போன்ற அனேக ஆசாரங்களை நாம் ஏதோ ஒரு மதத்தில்மட்டும் காண்கிறோ மில்லை; அகண்ட பூமண்டலத்தில் பலவிடங்களிலும் பார்த்து வருகிறோம். அவற்றிற்கு எதிரான ஆசாரங்களையும் அப்படியே பார்த்துவருகிறோம். ஆகவே தம்முடைய ஆசாரங்களுக்கு எதிராகவுள்ள ஆசாரங்களை வெறுப்பதோ நிந்திப் பதோ விவேகிகளுக்கு உற்றதன்று.

61. இவ்வண்ணமாகவே அர்த்த விசேஷங்களிலும் பல வேற்றுமைக ளிருப்பது தொன்றுதொட்டு ஸஹஜமானதே. பகவத்க்ருபை நிர்ஹேதுகமென் பதுதான் பழைய மதமென்றும், அது ஸஹேதுகமென்பது புதிய மதமென்றும் ஒரு விவேகியும் நினைக்கமாட்டார். வெளுப்புதான் அநாதி, கறுப்பு புதிது (அல் லது) கறுப்புதான் அநாதி, வெளுப்பு புதிது என்பாருண்டோ? ஈச்வர ஸ்ருஷ்டி யில் எதுவும் புதிதன்று. ப்ரக்ருத வாதவிவாத விஷயத்தில் நம்முடைய நிரூ பணங்களை நிபுணர்கள் உற்றுநோக்கவேணும். ஸ்ரீமந்நாதமுனிகளுக்கு முன்பும் ஸ்ரீவைஷ்ணவர்கள் இருந்தார்களாயினும் அவர்களை இன்னாரினையாரென்று நாம் அறிந்துகொள்ளமுடியவில்லை. நாதமுனிகள் தொடங்கியேநாம் ஆசாரியர்களாகப் பேணி வருகிறோம். அந்த ஆசார்ய பரம்பரை ஸ்ரீராமாநுஜரிடமிருந்து இரண்டு கிளையாகப் பிரியலுற்றதாய்ச் சொல்லிவருகிறோம். இவ்விரு கிளைகளில் ஒரு

கிளை மணவாளமாமுனிகளோடு முடிவு பெற்றதாகவும், மற்றொரு கிளை வேதாந்த தேசிகனோடு (அல்லது) அவர் திருக்குமாரரோடு முடிவுபெற்றதாகவும் சொல்லப்படுகிறது. முடிவுபெறுகையாவது ஆத்யந்திக ஸமாப்தியன்று; பூர்வாசார்ய வ்யபதேசம் அவ்வளவில் ஸமாப்தமாயிற்றென்றபடி.

62. இங்ஙனே இருகிளையாகப் பிரிந்துவந்தாலும் நாதமுனிகளும் ஆளவந்தாரும் ஸ்ரீராமாநுஜரும் சேமித்துப்போந்த அர்த்தங்களில் முரண்பாடு ஒரு கிளையிலும் உதிக்க ஹேதுவில்லை. கூரத்தாழ்வான் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை பிள்ளைலோகாசாரியர் முதலானோர் அநுபவிக்கும் அர்த்தங்களையேதான் பிள்ளான் ஆச்சான் எங்களாழ்வான் அம்மாள் அப்புள்ளார் வேதாந்த தேசிகன் முதலான ஆசாரியர்களும் அநுபவித்துவந்ததாக நன்கு காண்கிறோம். இதனை நாம் நம்முடைய பல நூல்களில் ஸப்ரமாணமாக நிரூபித்திருக்கிறோம். ஸமீப காலத்தில் வெளியிட்ட தேசிகஹ்ருதயமென்னும் நூலில் விசேஷித்து வெளியிட்டிருக்கிறோம். இவற்றைக்காணாத ஸ்ரீவைஷ்ணவர்கள் இல்லை.

63. இனி விசாலஹ்ருதயர்கள் ஆலோசிக்க வேண்டிய ஒருவிஷயத்தை விஜ்ஞாபிக்கிறோம். தென்னாசாரியர்கள் தேசிகனுக்குப் பகைவர்களென்றும் வடகலையார்களே தேசிகனுக்குப் பரிவர்களென்றும் ஒருப்ரவாதத்தை யாரோ சிலர் கிளப்ப அது உலகில் பரவியுள்ளது. இந்த ப்ரவாதம் ஸர்வாத்மநா நிராதாரமென்பதையும் ஸாதாரம் அஸம்பத்தமென்பதையும் ஒவ்வொருவருமிசையும்படியுணர்த்துவோமிங்கு. சில பல திவ்யதேசங்களில் வேதாந்த தேசிகன் விக்ரஹமாக எழுந்தருளியிருப்பதையும் உத்ஸவாதிகள் கண்டருளி வருவதையும் நாம் கண்டுவருகிறோம். இந்த விக்ரஹப்ரதிஷ்டையை முதன் முதலாகச் செய்தவர் யாவரென்று பார்க்கவேணும். திருவல்லிக்கேணி திருவிந்தளூர் ஆழ்வார் திருநகரி முதலான திவ்யதேசங்களில் அத்யாபி தேசிக விக்ரஹத்தை ஸேவிக்கிறோம், அவர்க்கு உத்ஸவாதிகளையும் அநுபவிக்கிறோம். இத்தலங்களில் வடகலையார்க்கு அன்றுமுதல் இன்றளவாக ஒருவிதமான அந்வயமும் ப்ரவேசமும் கிடையாதென்பதை யாவருமறிவர். அத்தலங்களில் தேசிகனை ப்ரதிஷ்டிப்பித்தவர்கள் வடகலையார்களல்லரென்பது வ்யக்தமாயிற்று. ஆனால் இதில் கைகூப்பிநில்லாதே விதண்டாவாதங்களைக் காசுக்கு முதவாதபடி செய்துகொண்டேயிருப்பர்கள் பிறர். தேசிகனைப்பற்றிக் கேள்வி கேட்பதை விட்டிட்டு அப்பரம்பரையில் அவர்க்குமுற்பட்ட ஆசாரியர்களைப் பற்றிக் கேட்கிறோம். .... .... .... .... .... (63)

64. ஒரு பரம்பரையில் பிள்ளைலோகாசாரியர்க்கும் மணவாளமாமுனிகளுக்குமேயன்று விக்ரஹப்ரதிஷ்டையுள்ளது. எம்பார் முதலியாண்டான் அனந்தாழ்வான், அருளாளப்பெருமாளெம்பெருமானார் கூரத்தாழ்வான் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை, திருவாய்மொழிப்பிள்ளை ஆகிய இவ்வாசாரியர்களுக்கும் விக்ரஹப்ரதிஷ்டை நடந்து உத்ஸவாதிப்ரவர்த்தனங்களும் நடைபெற்று வருகின்றன. இவர்களில் சில ஆசாரியர்களுக்கு நவீன காலத்தில் நம்போல்வார் செய்வித்திருக்கிற பிரதிஷ்டையைப்பற்றிச் சொல்லுகிறோமல்லோம். (அவரவர்களின்) திருவவதாரஸ்தலங்களிலும் ஸ்ரீரங்காதி ப்ரஸித்த திவ்யதேசங்களிலும் திருக்கோலங் கொண்டெழுந்தருளியிருக்கின்ற ஆசாரியர்களையே நாம் ப்ரஸ்தாவித்திருக்கிறோம். எம்பார் முதலியாண்டான் கூரத்தாழ்வான் ஆகிய இவ்வாசாரியர்களுக்கு அவர்களது திருவவதாரஸ்தலங்களில் எப்படிப்பட்ட ஆலயப்ரதிஷ்டை! எப்படிப்பட்ட உத்ஸவவைபவங்கள்! என்பதை உலகம் கட்கூடாகக் காணவில்லையா? இவ்வாசிரியர்களைப்போல் திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலான மற்றொரு பரம்பரையாசாரியர்களும்

ஸமாங்யரன்றிக்கே மஹாசாரியர்களல்லவா? அப்பேராசிரியர்களை வடகலையார்கள் உண்மையில் ஆதிகாலந்தொட்டு வழிபடுகின்றவர்களாயிருந்தால் ஓரிடத்திலாவது அவர்களுக்கு விக்ரஹப்ரதிஷ்டையும் உத்ஸவநிர்வாஹமும் செய்து க்ருதார்த்தர்களாகார்களா? நடாதூரம்மாள் ச்ருதப்ரகாசிகாபட்டர் இவர்கள் எப்படிப்பட்ட ப்ரபாவம் வாய்ந்த பேராசிரியர்கள் தெரியுமோ? ஓரிடத்திலாவது இவர்களைத் தாங்களணியும் புண்ட்ரத்தோடு ப்ரதிஷ்டை செய்திருக்கிறார்களோ? எங்களாழ்வான் திருவம்சஸ்தர்கள் அவரைத் திருவெள்ளறையிலும் மற்றுஞ் சில விடங்களிலும் ப்ரதிஷ்டிப்பித்து அவர்கள் விபவகாலத்திலணிந்து கொண்டிருந்த திவ்யோர்த்வபுண்ட்ரஸந்நிவேசத்தோடு ஆராதித்து வருவதைக் காண்கிறோம். திருவாய்மொழிப்பிள்ளை 'திறமும் இத்தகைத்தே இவர்களைக் கேட்டால் (அதாவது) உங்களுடைய பரம்பரையில் திகழும் ஆசாரியர்களில் எந்த ஆசாரியரை எந்த ஸ்தலத்தில் நீங்களணியும் புண்ட்ராகாரத்தோடு ப்ரதிஷ்டிப்பித்துக் குலாவி வருகின்றீர்கள்? என்று கேட்டால், பிராமாணிகமாக இவர்கள் சொல்லவேண்டிய விடை இதுவே; எது என்னில்;

"எங்களுக்குக் கோயில் ஸம்பந்தமோ பூர்வாசார்ய ஸம்பந்தமோ தொன்று தொட்டு இருந்திருக்குமானால் இக்காரியங்கள் நடந்திருக்க வழியுண்டு; திவ்ய ஸூரிகளோடும் திவ்யப்ரபந்தங்களோடும் திவ்யதேசங்களோடும் நாங்கள் தொடர்பு அற்றிருந்ததுபோலவே பூருவாசாரியர்களோடும்தொடர்பு அற்றிருந்தோம். இந்தத்தொடர்பை ஒருகாலவிசேஷத்திலே ஆவாஹனம் செய்துகொண்டோம்; அதுமுதலாக கோர்ட்டும் கொத்தளமுமாக அலைவதற்கே போது சரியாயிருப்பதால் திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலான ஆசாரியர்களுக்கு திவ்யமங்கள விக்ரஹப்ரதிஷ்டை செய்யவேண்டிய விஷயத்தில் எங்களுடைய கவனம் செல்லுவதற்கு அவகாசமே ஏற்படவில்லை. தேசிகனுடைய உறவைமட்டும் பலிஷ்டமாகக் கொண்டோமாதலால் ஸாத்யமானவரையில் அவர்க்கு மட்டும் சில திவ்யதேசங்களில் ஆலயங்களுக்கு வெளிநிலங்களிலே கோவில்களைக்கட்டி வைத்திருக்கிறோம், கட்டிக்கொண்டும் வருகிறோம்"

என்கிற இந்த பதில்தான் பிராமாணிகர்கள் சொல்லத்தகுவது.

65. ஆனால் இவ்வகையான பதில் நெஞ்சுக்குள்ளே நிற்குமேயொழிய வாயில் நின்றும் கையில் நின்றும் வெளிவருவது அரிது. கல்பகோடி சதமானாலும் இதற்கு ருஜுவான பதில் வேறு எதுவும் சொல்ல முடியாதென்பது திண்ணம். நம்மை நோக்கிச் சொல்லவோ எழுதவோ முன்வரமாட்டார்களெனினும் ஸ்வகோஷ்டிகளில் பரஸ்பரம் எதையாவது சொல்லிக்கொண்டேயிருப்பர்கள். அது மாப்பிள்ளை ஸந்தியாவந்தனக்கதையாகுமத்தனை.

66. மாப்பிள்ளை ஸந்தியாவந்தனக்கதையாவதென்னென்னில்; ஒருமாப்பிள்ளை மாமியாரகத்திற்குச் சென்றார். மாலைப்பொழுதில் மாமியார் தீர்த்த பாத்திரம் கொணர்ந்துவைத்து ஸந்தியாவந்தனம் செய்யுமென்றாள். நான் முன்னமே செய்தாயிற்று என்றார் மாப்பிள்ளை. எங்கே செய்தீரென்றாள் மாமியார். தெருக்கோடியிலிருக்கிற குளத்திலென்றார் ஜாமாதா. அந்தக்குளம் ஆறு மாதமாக வற்றிக்கிடக்கிறதே யென்றாள் மாமி. இல்லையில்லை; ஜலமிருப்பதாகச் சொன்னார்களென்றார் ஜாமாதா. ஜலமிருப்பதை நீர் பார்த்தீரோ? என்றாள் மாமி. நான் பார்க்கவில்லை யென்றார் ஜாமாதா. அப்படியானால் எங்கே ஸந்தியாவந்தனம் பண்ணினீரென்றாள் மாமி. அந்தக் குளத்தில்தான் பண்ணினேனென்றேனே! என்கிறார் ஜாமாதா. அதுதான் 6 மாதமாய் வற்றிக்கிடக்கிறதென்கிறேனே என்கிறாள் மாமி. ஜலமிருப்பதாகச் சொன்னார்களென்கிறேனே நான் என்கிறார் ஜாமாதா. இது ஓயாத கதை. இவ்வண்ணமாகவே இவர்கள் பதில் சொல்லிக்கொண்டிருக்கவேண்டும். வெள்காதே சொல்லுவர்கள்.

67. முடிவாக ஸாரமான வார்த்தைகள் நான்கு சொல்லித் தலைக்கட்டு கிறோம். ஆழ்வார்களுடையவும் அருளிச்செயல்களுடையவும் திவ்ய தேசங்களி னுடையவும் ஸம்பந்தத்தை விரும்பி ஆவாஹனம் செய்துகொள்வதில் பிச கொன்றுமில்லை. ஸௌஜந்யத்திற்குச் சிறிதும் பங்கமில்லாமலும் வீண் சண்டைகளுக்கு இடமில்லாமலும் ஆர்ஜவம் குன்றாமே அதைச்செய்துகொள்ள லாம். இருதரப்பிலும் பல லக்ஷக்கணக்கான ரூபாய்களுக்குச் செலவுவைத்து அஸுரராக்ஷஸ க்ருத்யங்களுக்கும் அவகாசமளித்து மிகவுமருவருக்கத்தக்க வழிகளில் சென்றுகொண்டிருப்பதானது மிகவும் காபேயமென்னத் தட்டில்லை

68. ராமாநுஜதயாபாத்ரம் முதலானவை இடையில் கல்பிதங்களென்ப தில் ஸந்தேஹமில்லை யென்றும், ஸ்ரீமான் வேங்கடதனியனிருக்க, பாத்ரத்தனி யன் முற்காலத்திலேயே தோன்ற ப்ரஸக்தியில்லையென்றும் நூறு ஹேதுக் களைக்கொண்டு நிரூபித்தோம். ஸ்ரீமான்வேங்கடதனியன் ஸௌம்யமாகவன் றிக்கே உத்வேகஜநகமான சொற்கள் கலசியிருப்பதால் அந்தக்குறையைத் தீர்ப்பதற்காக திவ்யப்ரபந்தங்களுக்குமட்டும் ஸௌம்யமான தனியனிருக்கட்டு மென்று கருதிய சிஷ்யரால் பாத்ரத்தனியன் பணிக்கப்பட்டதென்று ஸ்ரீபரகால மடத்திலிருந்தும் ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகர்களிடமிருந்தும் பதில் வெளிவந்தது. இதற்குமேல்கேட்ட கேள்வி யாதெனில்; அப்புள்ளாருக்கு தேசிகன் ஸாதித்த பரமகம்பீரமான தனியனிருக்க, அந்த அப்புள்ளார் பரமபதித்த வெகுகாலத்திற் குப்பிறகு *நமோ ராமாநுஜார்யாய* என்கிற அநுஷ்டுப்புத்தனியன் எதற்காகத் தோன்றியது? யாருடைய கோரிக்கையினால் எப்போது தோன்றியது? என்று கேட்டிருக்கிறோம். இதற்கு ருஜுவானவிடை வெளிவந்துவிடுமானால் தடஸ்தர் களுக்குப் பரமத்ருப்தியாகும். அதுதான் கிடையாதே. .... .... (68)

69. ஆழ்வார்களெல்லாருடையவும் ஸகல ஆசாரியர்களுடையவும் திருவவதார ஸ்தலங்கள் தொன்றுதொட்டு நிர்விவாதமாகத் தென்கலைத் திருமண்காப்புடன் விளங்காநிற்க, இதனால் ஸ்ரீவைஷ்ணவஸதாசார்ய பரம்பரையின் பரிசு கையி லங்கு நெல்லிக்கனியாகக் காணலாயிருக்க, தேசிகனொருவர்மட்டும் வேறுவித மான புண்ட்ரத்துடனிருந்தாரென்று ஹடம்பிடித்து அவர்க்கு அந்த புண்ட்ரத் தைத்தான் இடுவிக்கவேணுமென்று போராடுவது நெஞ்சை நடுநிலையில் வைத் துப்பார்ப்பவர்க்களுக்கு அருவருக்கத்தக்கதாகவே யாகும். ஆகாதா? (69)

70. பொய்கோபாலரென்பா ரொருவர் நேற்று திருவோணத்தன்று கத்தினர்—“தேசிகன் முன்னிலையில் ஸ்ரீசைலேச தயாபாத்ரம் சொல்லக்கேட்டுக் கொண்டும் *மணவாளமாமுனியே யின்னமொரு நூற்றாண்டிரும்* என்று பாடக் கேட்டுக்கொண்டும், அவர்க்கும் பல தலங்களில் தென்கலைத் திருமண்காப்பு சாத்தியிருக்கக் கண்டுகொண்டும் உயிர்மாயாதே உயிர்வாழ்ந்திருக்கின்ற நாமன்றோ தேசிகத்ரோஹிகள்!” என்று. அவரை நோக்கி ஒரு ரஸிகர் சொன் னர்—“ஸ்ரீரங்கத்தில் தேசிகனுக்கு ஒரு க்ஷணகாலம் வடகலை நாமமிட்டதற்காக ஆயிரம் ரூபாய் அபராதம் விதிக்க, அதைச் சொளசொளவென்று செலுத்தி ஹைகோர்ட்டுவரை ஸ்தாபித்துக்கொண்டு இன்னமும் நாமத்திற்கு மன்றாடு கிறவர்களே காணீர் உண்மையான தேசிகபக்தர்கள்” என்று. .... (70)

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய

## எழுபது நல்வார்த்தைத்திரள்

முற்றிற்று.